# சைவ சித்தாந்தமும்
# சமரச சுத்த சன்மார்க்கமும்

ஆறாம் உலகச் சைவ மாநாடு
19-21 டிசம்பர் 1997 தஞ்சாவூர்.
ஆராய்ச்சிக் கருத்தரங்கில் படிக்கப்பெற்று
ஆய்வாளர்கள் அனைவர்க்கும் வழங்கப்பெற்றது.

ஊரன் அடிகள்
சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்
தபால்பெட்டி எண் 2
வடலூர் 607 303 - கடலூர் மாவட்டம்.

# சைவ ஆதீனங்கள் - நூல் வெளியீடு
# அறிவிப்பும் வேண்டுகோளும்

சைவ ஆதீனங்கள் அனைத்தின் வரலாறுகளும் ஒரே நூலாக இதுவரை வெளிவரவில்லை இப்போது முதன் முதலாக நமது சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலைய வெளியீடாக அண்மையில் வெளிவர இருக்கிறது.

திருவாவடுதுறை – தருமபுரம் – திருப்பனந்தாள் – சூரியனார் கோயில் – காஞ்சிபுரம் – மதுரை – குன்றக்குடி – துழாவூர் – வேளாக்குறிச்சி-பெருங்குளம்-வரணி முதலிய சைவஆதீனங்கள், கும்பகோணம் – துறையூர் – மயிலம் – பேரூர் – விருத்தாசலம்– திருப்போரூர் – திருக்கோவலூர் – சிதம்பரம் – புதுச்சேரி முதலிய வீரசைவ ஆதீனங்கள், திருஆமாத்தூர் – சிரவணபுரம் முதலிய கௌமாரமடங்கள், மற்றும் பல, ஆக முப்பது ஆதீனங்களின் வரலாற்றைக் கூறும் இந்நூல் ஓர் அற்புதப் படைப்பு; இந் நூலைய சைவ உலகுக்கு இன்றியமையா அமுத விருந்து.

இன்னும் மூன்று திங்களுக்குள் வெளிவர இருக்கிறது. வெளியீட்டு விலை ரூ. 200-00. இப்போதே முன்பணம் அளித்துப் பதிவு செய்து கொள்வோர்க்குச் சலுகை விலை 150–00. 1998 ஜனவரி 31 ஆம் தேதி வரை சலுகை விலையை முன்பணமாக அளித்துப் பதிவு செய்து கொள்ளலாம் சலுகை விலையை முன்பணமாக அளித்துப் பதிவு செய்துகொள்வது வெளியீட்டுக்கு உதவுவதாகும்.

நன்கொடையும் வழங்கியுதவலாம். ரூ. 1000/- (ஆயிரம்) அதற்கு மேலும் நன்கொடை வழங்குவோர் பெயர் நூலிற் குறிப்பிடப்பெறும்.

அன்பர்கள் தங்களால் இயன்ற அதிக அளவு நன்கொடையை வழங்கியுதவியும் முன்பதிவு செய்தும் புகழும் புண்ணியமும் பெற வேண்டுகிறோம்.

— ஊரன் அடிகள்

**OORAN ADIGAL**
POST BOX NO. 2
VADALUR 607 303
CUDDALORE DISTRICT
TAMIL NADU - INDIA
PHONE 04142/59382.

# சைவ சித்தாந்தமும் வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கமும்

தவத்திரு ஊரன் அடிகள்.
வடலூர்

சைவராகப் பிறந்த வள்ளலார் பின்னாளில் சமரச சுத்த சன்மார்க்கம் என்றொரு புதிய நெறியைக் கண்டார். சைவத்தி லிருந்தே வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கம் தோன்றிற்று.

சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்பதற்குப் பொருள் விளக்கம் கூறும் வள்ளலார், ''எல்லாச் சமயங்களுக்கும் பொது வாகிய அறிவுநூல் முடிபான நான்காவது மார்க்கத்தை அநுஷ்டிக்கின்ற கூட்டமென்று கொள்க. மேற்படி மார்க்கம் நான்காவன; தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என நான்கு'' எனக் கூறுகின்றார் இவ்வாறு கூறுவதே வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கம் சைவத்தி லிருந்து தோன்றியது என்பதற்கு அகச்சான்றாகும்.

சைவசமயகுரவர் நால்வரும் பொதுவாகச் சைவத்தை விளக்க வந்தவர்களெனினும், சிறப்பாக ஒவ்வொருவரும் சைவத்தின் ஒவ்வொரு மார்க்கத்தை விளக்க வந்தவர்கள் எனலாம்.

தாச மார்க்கத்தை விளக்க வந்தவர், திருநாவுக்கரசர்.
சற்புத்திர மார்க்கத்தை விளக்க வந்தவர் திருஞானசம்பந்தர்.
சகமார்க்கத்தை விளக்க வந்தவர் சுந்தரமூர்த்திகள்.
சன்மார்க்கத்தை விளக்க வந்தவர் மாணிக்கவாசகர்.
சன்மார்க்கத்தைச் சமரச சுத்த சன்மார்க்கமாக விளக்க வந்தவர் வள்ளலார்.

சன்மார்க்கத்தோடு சமரசம், சுத்தம் என்ற இரண்டு சொற் களைச் சேர்க்கிறார் வள்ளலார். சமரச சுத்த சன்மார்க்கம் என்கிறார். பின்னாளில் சங்கம், சாலை, சபை நிறுவிய காலத்

திலும் அவை ஒவ்வொன்றன் பெயரினும் சமரசம் சுத்தம் என்ற சொற்களைத் தவறாது சேர்த்தே பெயரிடுகிறார். சங்கத்திற்குச், சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் என்றும், சாலைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய தருமச்சாலை என்றும் சபைக்குச் சமரச சுத்த சன்மார்க்க சத்திய ஞானசபை என்றும் பேரிடுகிறார்.

மருவி உயர்ந்தது சமரசம், மறுத்துக் கடந்தது சுத்தம் என, சமரசம் சுத்தம் என்பவற்றிற்கு விளக்கமளிக்கிறார்.

தமது மார்க்கம் ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கம் என்கிறார். ஷடாந்தங்கள் வேதாந்தம், சித்தாந்தம் போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம், கலாந்தம் எனக் கூறுவதுடன். வேதாந்தமும் சித்தாந்தமும் இப்போது வியாபக மாக விளங்க, ஏனைய நான்கு அந்தங்களும் அருகியிருப்பதற்கு ஒரு காரணமும் கூறுகிறார்.

"மேற்படி அந்தங்களின் அனுபவம் காலம் இடம் முதலிய வேறுபாடுகளால் ஏறிக்குறையும். ஆதலால் ஷடாந்தமும் வியாபக மில்லாமல் வேதாந்த சித்தாந்தத்தில் நான்கந்தமும் வியாப்பிய மாயிருக்கின்றன. மேற்படி அந்தம் நான்கின் ஐக்கிய விவரம்; வேதாந்தத்தில் போதாந்த யோகாந்தமும், சித்தாந்தத்தில் நாதாந்த கலாந்தமும் அடங்கியிருக்கின்றன. இந்த ஐக்கியம் பற்றி வேதாந்த சித்தாந்தமே இப்போது அனுபவத்தில் சுத்த வேதாந்த சுத்தசித்தாந்தமாய் வழங்குகின்றன" என்பது வள்ளற் பெருமான் உபதேசம்.

நான்கு மார்க்கங்களுக்கும் வள்ளலார் புதிய விளக்கம் ஒன்றையும் கூறுகிறார்.

இறைவனுக்கு அடிமையாதல் – தாசமார்க்கம்
இறைவனுக்கு மக்களாதல் – சற்புத்திரமார்க்கம்
இறைவனுக்கு நட்பாதல் – சகமார்க்கம்
இறைவனே தானாதல் – சன்மார்க்கம்

இது பழமையாகத் தொன்று தொட்டுக் கூறப்பெற்று வரும் பொருள். இனி, வள்ளலார் கூறும் புதிய பொருள்;

எல்லா உயிர்களையும் தன் அடிமையாகப் பாவித்தல் – தாசமார்க்கம்

எல்லா உயிர்களையும் தன் மக்களாகப் பாவித்தல் – சற்புத்திர மார்க்கம்.

எல்லா உயிர்களையும் தன் நட்பாகப் பாவித்தல் – சகமார்க்கம்.

எல்லா உயிர்களையும் தன்னைப் போலவே பாவித்தல்– சன்மார்க்கம்.

இது வள்ளலார் கூறும் புதிய விளக்கம். இதை "ஜீவ நியாயம்" என்று குறிப்பிடுகிறார் வள்ளலார். இதை ஜீவநியாயம் எனவே, முன் கூறிய பழைமையான பொருள் தெய்வ நியாயம் என்றாகிறது.

பழைய விளக்கம், கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவைக் காட்டுகிறது. கடவுளின் தந்தைமையைக் (Fatherhood of God) காட்டுகிறது. வள்ளலார் கூறும் புதிய பொருள், புதிய விளக்கம் ஓர் ஆன்மாவுக்கும் மற்றோர் ஆன்மாவுக்கும் இடையே இருக்கவேண்டிய உறவைக் காட்டுகிறது. ஆன்மாக்களின் சகோதரத்துவத்தைக் (Brotherhood of souls) காட்டுகிறது. இது உயிர் உறவு. ஆன்மநேயம். ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையை இவ்வாறு விளக்குகிறார் வள்ளலார்.

சன்மார்க்கப் பெருநெறி ஒழுக்கங்களாக நான்கு ஒழுக்கங்களை வள்ளலார் கூறுகிறார்.

1. இந்திரிய ஒழுக்கம்
2. கரண ஒழுக்கம்
3. ஜீவ ஒழுக்கம்
4. ஆன்ம ஒழுக்கம்

ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் ஆகிய பத்தையும் தீதின்பாற் செல்லவிடாது நன்றிபாலுய்த்தல் இந்திரிய ஒழுக்கம். மனம் முதலிய கரணங்களைத் தீதின்பாற் செல்லவிடாது நன்றின்பாலுய்ப்பது கரண ஒழுக்கம். மக்கள் எல்லோரையும் தன்னைப் போல் பாவிப்பது ஜீவ ஒழுக்கம். எல்லா உயிர்களையும் தன்னைப்போல் பாவிப்பது ஆன்ம ஒழுக்கம். இப்படியும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டை விளக்குகிறார் வள்ளலார்.

வள்ளலார் பிறப்பால் சைவர்.
முதன் முதலில் வழிபட்ட தலம் தில்லைச் சிதம்பரம்.
முதன் முதலில் பாடிய தலம் சென்னைக் கந்தகோட்டம்,

வழிபடு கடவுள் முருகன், வழிபடு குரு திருஞானசம்பந்தர், வழிபடு நூல் திருவாசகம் என்ற அமைப்பை இளமைக்காலத்தில்: பிள்ளைப் பருவத்திலேயே அமைத்துக் கொள்ளுகிறார்.

திருக்குறள், திருமந்திரம், திருவாசகம் ஆகிய மூன்றையும் முக்கிய பிரமாண நூல்களாகக் கொள்ளுகிறார்.

சமயகுரவர் நால்வரையும் போற்றி நான்கு பாமாலைகளைச் செய்கிறார். இவை தவிரத் திருவருட்பாவில் பல்வேறு பாமாலை களிலும் நால்வரை ஆங்காங்கே போற்றுகிறார்.

சிவத்தலங்கள் பலவற்றைத் தரிசித்துப் பாடுகிறார். பாடல் பெற்ற சிவத்தலங்கள் அனைத்தையுமே சிவத்தல வரிசையில் தொடர்ச்சியாகக் குறிப்பிட்டு விண்ணப்பக் கலிவெண்பா என்ற தொரு மிக நீண்ட பாடலைச் செய்கிறார்.

பலகாலம் தாம் வழிபட்ட தில்லையைப் பூர்வஞானசிதம்பரம் என்கிறார். வடலூரை உத்தரஞானசிதம்பர மாக்குகிறார்.

வள்ளலார் அருளிய திருவருட்பா ஆறு திருமுறைகளாக வகுக்கப்பெற் றுள்ளது. முதல் ஐந்து திருமுறைகளை ஒரு தொகுதியாகவும் ஆறாம் திருமுறையை ஒரு தனித் தொகுதி யாகவும் வழங்கும் வழக்கம் இருந்து வருகிறது. முதல் ஐந்து திருமுறைகளில் சைவம் மிகுதி; சமரச சுத்த சன்மார்க்கத்தின் குறிப்புகள் ஆங்காங்கே உண்டு எனினும் குறைவு. ஆறாம் திருமுறையில் சமரச சுத்த சன்மார்க்கம் மிகுதி. முதல் ஐந்து திருமுறைகளில் சிவபக்தி, ஆறாம் திருமுறையில் சிவ அனுபவம்; சமரச சுத்த சன்மார்க்க அனுபவம்.

திருவருட்பா முழுவதிலுமே சிவமணம் கமழும். ஆறாம் திருமுறையிலும் சிவம் உண்டு. அருட்பெருஞ்ஜோதி அகவலிலும் சிவம் உண்டு. அனுபவமாலையிலும் உண்டு. ஆனால் அங்கெல்லாம் சிவம் என்பது பரம்பொருளே, பரசிவமே, அருட்பெருஞ்ஜோதியே. ஒரு காலத்தில், ஒரு சமயத்தில் நடராஜரை நடராஜராகவே கண்ட வள்ளலார் பிற்காலத்தில் நடராஜரை அருட்பெருஞ் ஜோதியாகக் காண்கிறார். அருட்பெருஞ்ஜோதி நடராஜபதியே என்கிறார்.

எதையும், எல்லாவற்றையும் தத்துவமாகக் காணும் வழக்கம் வள்ளற்பெருமானிடத்து உள்ளது.

தொடக்கத்தில் தெய்வங்களை உருவ நிலையிற் கண்ட வள்ளலார் போகப்போக அருவநிலையிற் காண்கிறார். தத்துவங்களாகக் காண்கிறார். வள்ளலாரே உருவநிலையிலிருந்து அருவ நிலை அடைகிறாரல்லவா?

புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகன்மிருதிவழி உழன்றும் புகலும் ஆச்சிரம
அறத்துறைகள் அவைஅடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர் இதிற் சரியை கிரியை யோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.

என்னும் சிவஞானசித்தியார்ச் செய்யுளும் (263)

சரியை நிலைநான்கும் ஒருகிரியை நிலைநான்கும்
தனியோக நிலைநான்கும் தனித்தனி கண்டறிந்தேன்
உரிய சிவஞான நிலைநான்கும் அருள்ஒளியால்
ஒன்றொன்றா அறிந்தேன் மேல்உண்மை நிலைபெற்றேன்
அரிய சிவசித்தாந்த வேதாந்த முதலாம்
ஆறந்தநிலை அறிந்தேன் அப்பால் நின்றோங்கும்
பெரிய சிவஅனுபவத்தால் சமரச சன்மார்க்கம்
பெற்றேன் இங்கிறவாமை உற்றேன்காண் தோழி

என்னும் திருவருட்பாவும் (5806) ஒப்பு நோக்கத்தக்கன.

இரண்டும் படிமுறைகளை விளக்கும் பாடல்கள், சித்தியார்ச் செய்யுள் புறச்சமயத்திலிருந்து அகச்சமயம் சார்ந்து சைவத் திறத்தடைந்து சிவனடி சேரும் படிநிலைகளைக் கூறுவது. அருட்பாப்பாடல், சைவத்திலிருந்து சமரச சுத்த சன்மார்க்கம் சார்ந்து மரணமிலாப் பெருவாழ்வு பெறும படிநிலைகளைக் கூறுவது.

## வள்ளலார் கூறும் புதிய புருடார்த்தங்கள்

அறம், பொருள், இன்பம், வீடு எனப் புருடார்த்தங்கள் நான்கு என்பது பழைமையான வழக்கு. வள்ளலார் நான்கு புதிய புருடார்த்தங்களைக் கூறுகிறார்.

1. ஏமசித்தி
2. சாகாக்கல்வி

3. கடவுள் நிலை அறிந்து அம்மயமாதல்
4. தத்துவநிக்கிரகம்

ஏமசித்தி என்பது பொன்செய்யும் (ரசவாத) ஆற்றல் பெறுதல். சாகாக்கல்வி என்பது இறவாமை, மரணமிலாப் பெருவாழ்வு. கடவுள் நிலை அறிந்து அம்மயமாதல் என்பதும் அதுவே. தத்துவநிக்கிரகம் என்பது தன்னிடமுள்ள தொன்னூற்று ஆறு தத்துவங்களையும் வெல்லுதல்.

## இறைவன் வள்ளலாருக்கு உபதேசித்த சன்மார்க்க மரபு

இறைவன் தமக்கு உபதேசித்த சன்மார்க்க மரபு என்று வள்ளற்பெருமான் ஒரு பாடலைப் பாடுகின்றார்.

**சாகாத கல்வியே கல்வி, ஒன்றே சிவம்**
**தானென அறிந்த அறிவே**
**தகும் அறிவு, மலம் ஐந்தும் வென்ற வல்லபமே**
**தனித்த பூரண வல்லபம்,**
**வேகாத காலாதி கண்டுகொண் டெப்பொருளும்**
**விளைய விளைவித்த தொழிலே**
**மெய்த்தொழிலதாகும், இந்நான்கையும் ஒருங்கே**
**வியந்தடைந் துலகம் எல்லாம்**
**மாகாத லுற எலாம் வல்ல சித்தாகி நிறை**
**வான வரமே இன்பமாம்**
**மன்னும் இது நீ பெற்ற சுத்த சன்மார்க்கத்தின்**
**மரபென்றுரைத்த குருவே**
**தேகாதி மூன்றும் நான் தருமுன் அருள்செய் தெனைத்**
**தேற்றி அருள் செய்த சிவமே**
**சிற்சபையின் நடுநின்ற ஒன்றான கடவுளே**
**தெய்வ நடராஜ பதியே**

— திருவருட்பா 3678

1. சாகாத கல்வியே கல்வி
2. ஒன்றே சிவம் என அறியும் அறிவே அறிவு
3. மலம் ஐந்தும் வென்ற வல்லபமே வல்லபம்
4. வேகாத கால் முதலியவற்றைக் கண்டுகொண்டு எப்பொருளும் விளைய விளைவிக்கும் தொழிலே மெய்த் தொழில்.

இந்நான்கையும் ஒருங்கே அடைவது சுத்த சன்மார்க்கத்தின் மரபு என்று இறைவனே குருவாகி உரைத்ததாக வள்ளற் பெருமான் கூறுகின்றார்.

''ஔவையார் தத்துவங் கூறிய வெண்பா'' என்றொரு பாடல், தனிப்பாடல் திரட்டுகளிலும், தனிச்செய்யுட் சிந்தா மணியிலும், தமிழ்நாவலர் சரிதையிலும், பெருந்தொகையிலும் காணப்பெறுகிறது. அது வருமாறு:

**ஒன்றாகக் காண்பதே காட்சி புலனைந்தும்**
**வென்றான் தன் வீரமே வீரம் – என்றானும்**
**சாவாமற்கற்பதே கல்வி தனைப்பிறர்**
**ஏவாமல் உண்பதே ஊண்** – தனிச்செய்யுட் சிந்தாமணி

ஔவையார் பாடலை அப்படியே படிசெய்தது போல் வள்ளலார் பாடல் உள்ளது.

| ஔவையார் | வள்ளலார் |
|---|---|
| 1. ஒன்றாகக் காண்பதே காட்சி | 2. ஒன்றே சிவம் தான் என அறிந்த அறிவே தரும் அறிவு |
| 2. புலன் ஐந்தும் வென்றான் தன் வீரமே வீரம் | 3. மலம் ஐந்தும் வென்ற வல்லபமே தனித்த பூரண வல்லபம் |
| 3. சாவாமற் கற்பதே கல்வி | 1. சாகாத கல்வியே கல்வி |

புதிய புருடார்த்தங்களாக வள்ளலார் உபதேசத்திற் கூறிய நான்குமே சன்மார்க்க மரபு கூறும் பாடலிலும் கூறப்பெறுகிறது. சொல்லப்படும் வரிசையும் சொற்களுமே வேறு; பொருள் ஒன்றே.

| சன்மார்க்க மரபு கூறும் பாடல் | புதிய புருடார்த்தம் கூறும் உபதேசம் |
|---|---|
| 1. சாகாத கல்வி | 2. சாகாக்கல்வி |
| 2. ஒன்றே சிவம் என அறியும் அறிவு | 3. கடவுள் நிலை அறிந்து அம்மயமாதல் |
| 3. மலம் ஐந்தும் வென்ற வல்லபம் | 4. தத்துவநிக்கிரகம் |
| 4. எல்லாம் விளைய விளைவிக்கும் தொழில் (எல்லாம் வல்ல சித்தி) | 1. ஏமசித்தி. |

## ஏமசித்தி

ஏமம் – பொன், ஏமசித்தி – பொன் செய்தல். பொன் செய்யும் ஆற்றல் சித்திக்கப் பெறுதல், ரசவாதம். சுருக்கமாக வாதம். வாதம், வைத்தியம் இவ்விரண்டும் சித்தர் சைவத்தில் உண்டு; சித்தாந்த சைவத்தில் இல்லை. வள்ளலாருக்கு இவ் விரண்டுமே உண்டு. ஏமசித்தியை ஒரு புருடார்த்தமாகவே, நாம் பெற வேண்டியவற்றுள் ஒன்றாகவே வள்ளலார் கூறுகிறார். வள்ளலார் மருத்துவத்திலும் வல்லவர்.

வகரவித்தை, தகரவித்தை என்று இரு வித்தைகள் சித்தர் சைவத்தில் பேசப்பெறுகின்றன. வள்ளலாரும் கூறுகிறார். வகரம், தகரம் என்பவை குறியீடுகள். வகரம் – பொன், தங்கம். தகரம் – உடம்பு.

வகர வித்தை – உலோகத்தைப் பொன்னாக்கல், தாதுவாதம்

தகர வித்தை – தேகத்தைப் பொன்னாக்குதல், தேகவாதம்.

"செம்பு பொன்னாகும் சிவாயநம வென்னில்" என்றது வகரவித்தையை (திருமந்திரம் 903). "சிவாயநம என்னும் குளிகை யிட்டுப் பொன்னாக்குவன் கூட்டையே" என்றது தகரவித்தையை (திருமந்திரம் 2709)

வள்ளற்பெருமான் ஏமசித்திகைவரப்பெற்றவர் (திருஅருட்பா 3962). வள்ளற்பெருமானது சமரச சுத்த சன்மார்க்கத்தில் ஏம சித்தி இவ்வாறாக, சைவசித்தாந்தத்தில் அது இவ்வாறில்லை. எனினும் வேறு ஒருவகையில் இருக்கிறது அடியார்களின் தேவைக்கு ஆண்டவன் பொற்கிழி, பொற்காசு, வழங்கியருள்வ தாக அது உள்ளது. சம்பந்தர்க்குப் பொற்கிழி, சம்பந்தர்க்கும் அப்பருக்கும் பொற்காசு, சுந்தரர்க்குப் பொன் வழங்கியது, செங்கல் பொன்னானது ஆகிய அற்புதங்களைக் காண்க. சைவத்தில் அருளிப்பாடாகவும் அற்புதமாகவும் பொன் வழங்கல் அருகி வழங்க, வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கத்தில் பொன் செய்யும் ஆற்றலாகிய ஏமசித்தி, சன்மார்க்கிகள் பெற வேண்டிய ஒரு புருடார்த்தமாகவே கூறப்பெறுகிறது.

சித்தர்களும் வள்ளலாரும் வாத வைத்தியங்களைக் கொண்டதேன்? கூறுவதேன்? எனில், தேகத்தைச் சித்தி செய்து கொள்ளுதல் இவர்களது கொள்கை. தேகத்தைச் சித்தி செய்து கொள்ளுவதற்காகவே வாத வைத்தியங்களை இவர்கள் கூறுகின்றனர்.

## தேகசித்தி

சமயகுரவர்கள் நால்வரும் உடம்போடே முத்தி பெற்றவர்கள். நால்வருக்கும் மண்ணில் சமாதியோ அக்கினியில் தகனமோ இல்லை. உடம்பைப் பிணமாக வீழ்த்தாமல் உடம்போடேயே நால்வரும் இறைவனோடு இரண்டறக்கலந்துள்ளனர். சம்பந்தர் திருமணநாளில் திருப்பெருமணநல்லூர்த் திருக்கோயில் மூலத் தானத்தில் எழுந்த சிவஜோதியிற் கலந்து முத்தி பெற்றார். அப்பர் திருப்புகலூரில் சிவலிங்க ஐக்கியமானார். சுந்தரர் கயிலையிலிருந்து வந்த வெள்ளை யானையின் மீது ஏறிக் கயிலைக்குச் சென்றார். மாணிக்கவாசகர் சிதம்பரத்தில் நடராஜருடன் ஐக்கியமானார். இவ்வாறாயினும், சைவசித்தாந்தத்தில் உடம்போடு முத்தி பெறுவது, இன்றியமையாததாக, சிறப்பானதாக விதந்து பேசப் பெறவில்லை. வள்ளலாரின் சமரச சுத்த சன்மார்க்கத்தில் தேகசித்தி, உடம்போடு சித்தி பெறுதல், இன்றியமையாததாக விதந்து பேசப்பெறுகிறது. சுத்ததேகம் (ஒளியுடம்பு) பிரணவ தேகம் (ஒலியுடம்பு) ஞானதேகம் (அருளுடம்பு) என்னும் மூவகைத் தேகசித்தி இன்றியமையாததாகக் கூறப்பெறுகிறது.

## முத்தியும் சித்தியும்

முடிவான பேற்றை ''முத்தி'' என்று சைவசித்தாந்தம் கூற வள்ளலாரோ முடிவான பேறு ''சித்தியே'' என்று கூறுகிறார். ''முத்தி'' என்பது, அடையவேண்டிய நிலைக்கு முன்னே உள்ள ஒரு சாதனம் என்றும், ''சித்தி'' என்பது அடையவேண்டிய நிலையை அடைந்து அனுபவிக்கும் அனுபவம் என்றும் வள்ளலார் கூறுகிறார். முத்தியைச் சாதனமாக்கி, சித்தியைச் சாத்தியமாக்குகிறார். சித்தியைப் பெறும்பொருட்டே முத்தியை அடைவது என்று விளக்கமும் கூறுகிறார்.

**புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை**
**அடைவதென் றருளிய அருட்பெருஞ் ஜோதி**
**முத்தி என்பது நிலைமுன் உறுசாதனம்**
**அத்தக வென்றஎன் அருட்பெருஞ் ஜோதி**
**சித்தி என்பது நிலைசேர்ந்த அனுபவம்**
**அத்திறம் என்றஎன் அருட்பெருஞ்ஜோதி**

என்பது வள்ளலார் அருளிய அருட்பெருஞ்ஜோதி அகவல் (திருஅருட்பா 4615) ''முத்தி என்பது நிலைமுன் உறு சாதனம்'', ''சித்தி என்பது நிலை சேர்ந்த அனுபவம்'', ''சித்தியின்

பொருட்டே முத்தியை அடைவது'' என்ற அடிகளைக் கவனிக்க. அருட்பெருஞ்ஜோதி அகவலில் இவ்வாறு முத்தி சித்திகளை விளக்கும் வள்ளலார் தமது அனுபவத்தைக் கூறுமிடத்தும்

**முத்தியைப் பெற்றேன் அம்முத்தியினால் ஞான**
**சித்தியை உற்றேன் என்றுந்தீபற**
**சித்தனும் ஆனேன் என்றுந்தீபற**

எனத் திருவுந்தியாரிற் கூறுகிறார் (திருவருட்பா 4904)

இம்முத்தி சித்தி விஷயம் சைவர் பலரை முகஞ்சுளிக்கச் செய்யும் இடமாக இருக்கிறது. "சித்தி எனினும் முத்தி எனினும் ஒக்கும்'' என்பர் சிவஞானமுனிவர் (சூத்திரம் 2, அதிகரணம் 2). முத்தி சித்திகளைப் பின்வருமாறு விளங்கிக் கொண்டால் பிரச்சனைக்கு இடமில்லை.

முத்தி - பாசவீடு, பாசநீக்கம்; நிலைமுன் உறுசாதனம்.
சித்தி - சிவப்பேறு, நிலைசேர்ந்த அனுபவம்

வீடுபேறு என்பதில், விடுதல் முத்தி, பெறுதல் சித்தி. பாசத்தை விடுத்துச் சிவப்பேற்றைப் பெறவேண்டும்.

விடுதல் (வீடு) - முத்தி
பெறுதல் (பேறு) - சித்தி

முத்தியினால் சித்தியைப் பெறுதல் - பாசநீக்கத்தால் சிவப்பேற்றைப் பெறுதல். இவ்வாறு சமாதானம் செய்து கொள்ளலாம். இதில் சைவர்களுக்கும் சன்மார்க்கிகளுக்கும் பூசல் வேண்டியதில்லை.

## ஐந்தொழில் ஆற்றல்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களும் இறைவனுக்கே உரியன, முத்தி நிலையிலும் ஆன்மாக்களுக்கு ஐந்தொழில் செய்யும் அதிகாரம் இல்லை என்பது சைவசித்தாந்தம்.

வள்ளலார், தாம் ஐந்தொழில் செய்யும் ஆற்றல் பெற்றதாக, தமக்கு ஐந்தொழிலாற்றலை இறைவன் அருளியதாகப் பல இடங்களிற் கூறுகிறார்.

**''சிந்தையில் துன்பொழி சிவம் பெறுகெனத் தொழில்**
**ஐந்தையும் எனக்கருள் அருட்பெருஞ் ஜோதி''** -4615(167)

"உலகுயிர்த் திரளெலாம் ஒளிநெறி பெற்றிட
இலகும் ஐந்தொழிலையும் யான்செயத் தந்தனை"
–4615 (1577)

என்பன அகச்சான்றுகளாம். இவ்வைந்தொழில் விஷயமும் சித்தாந்தத்துக்கும், சமரச சுத்த சன்மார்க்கத்துக்கும் உள்ள ஒரு முக்கிய வேறுபாடாம்.

## இறந்தோரைப் புதைப்பதா? எரிப்பதா?

இறந்தோரைப் புதைப்பது எரிப்பது இரண்டுமே சைவத்தில் வழக்கமாக உள்ளது. பொதுவாக இந்துமதத்தில் இரண்டு வழக்கமும் உள்ளதென்று கூறலாம்.

கிறிஸ்தவ இஸ்லாமிய மதங்களில் எரிப்பதில்லை; புதைப்பது மட்டுமே. வீரசைவத்திலும் எரிப்பதில்லை; புதைப்பது மட்டுமே.

வள்ளலாரது சமரச சுத்த சன்மார்க்கத்தில் எரிக்கக்கூடாது, புதைக்க வேண்டும் என்பதே வள்ளற்பெருமானின் மிகமிகக் கண்டிப்பான கட்டளை. சமாதி வற்புறுத்தலாக ஒரு பதிகமே பத்துப்பாடல்கள் (திருஅருட்பா 5604–13) வள்ளலார் பாடியுள்ளார். சன்மார்க்கிகளுக்கு இட்ட சமாதிக்கட்டளை என ஒரு கண்டிப்பான உரைநடை அறிவிப்பும் உண்டு. "பரன் அளிக்கும் தேகம் இது, சுடுவது அபாரதம்" என்று மென்மையாகக் கூறும் வள்ளலார் "சுட்டால் அதுதான் கொலையாம்" என்று வன்மையாகவும் கூறுகிறார். பிணங்களைச் சுடுவதும் கொலையே என்ற அளவுக்கு வள்ளலார் போகிறார்.

## சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல்

சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் என்றொரு மும்மை வள்ளற்பெருமானது பாடல்களிலும் உபதேசங்களிலும் கூறப்பெறுகிறது. இவை சாகாக் கல்வியைத் தெரிவிக்கும் என்கிறார் வள்ளலார். சித்தாந்த நூல்களிற் கூறப்பெறாத இவற்றைச் சித்தர் நூல்களிலிருந்து வள்ளற்பெருமான் எடுத்துக்கூறுகிறார். இவ்வாறு இன்னும் சிலவும் உண்டு.

## புலால்மறுத்தல், சைவஉணவு

சமரச சுத்த சன்மார்க்கம் முழுக்க முழுக்க, நூற்றுக்கு நூறு, 100 % புலால் மறுப்பது, சைவஉணவு கொள்வது. சைவ சித்தாந்தம் அப்படியன்று. சைவத்தில் புலால் மறுப்பதும் சைவ

உணவு கொள்வதும் சமயஒழுக்கமாக இல்லை; சாதிஒழுக்கமாகவே உள்ளது. சமரச சுத்த சன்மார்க்கத்தில் புலால்மறுத்தல், சைவ உணவு கொள்ளல், மார்க்கக் கொள்கையாகவே உள்ளது. புலால் உண்போர் சன்மார்க்கர் ஆகார். ஆனால் சைவராக இருத்தல் இயலும்.

சாதி ஒன்று, சமயம் ஒன்று, குலம் ஒன்று, கோத்திரம் ஒன்று என்று துறைதோறும் ஒருமைப்பாட்டை வற்புறுத்தும் சமரச சுத்த சன்மார்க்கம் உணவொழுக்கம் பற்றி மக்களை இரு வகையாகப் பிரிக்கிறது. புலால் உண்போர் புறஇனத்தார். புலால் மறுத்தோர் அகஇனத்தார். புலால் மறுத்த அகவினத்தாரே சன்மார்க்கத்திற்கு உரியர், புலாலுண்ணும் புறவினத்தார் சன்மார்க்கத்திற்கு அருகர் அல்லர். இப்பிரிவு சமரச சுத்த சன்மார்க்கத்தில் மிகவும் கண்டிப்பானது.

வடலூரில் சத்திய ஞானசபையில் புலை கொலை நீத்தவர்கள் மட்டுமே உள்ளே நுழைந்து வழிபடலாம், புலாலுண்போர் புறத்தே நின்றுதான் வழிபடவேண்டும். இது வள்ளற்பெருமானின் கண்டிப்பான கட்டளை. இக்கட்டளை சபை வாயில்களில் சபை கட்டப்பெற்ற காலத்திலிருந்தே எழுதி வைக்கப் பெற்றுள்ளது. சமரச சுத்த சன்மார்க்கத்தில் புலால் உண்போர்க்கு ஆலயப் பிரவேச உரிமை இல்லை. சைவத்தில் இவ்வளவு கண்டிப்பில்லை.

## சன்மார்க்க சாதனம் ஜீவகாருண்யமே

சைவம் ஜீவகாருண்யமுடையதுதான். ஆனால் சமரச சுத்த சன்மார்க்கம் ஜீவகாருண்யத்தை வற்புறுத்துமளவுக்குச் சைவம் வற்புறுத்தவில்லை. ''ஜீவகாருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு'' என்கிறார் வள்ளலார். ''ஜீவகாருண்ய ஒழுக்கமே சன்மார்க்கம், அருள் என்பது கடவுள் தயவு. கடவுள் இயற்கை விளக்கம், ஜீவகாருண்யம் என்பது சீவர்கள் தயவு, சீவர்கள் ஆன்ம இயற்கை விளக்கம். ஞானவழி என்பதும் சன்மார்க்கம் என்பதும் ஜீவகாருண்ய ஒழுக்கம். அஞ்ஞானவழி என்பதும் துன்மார்க்கம் என்பதும் ஜீவகாருண்ய ஒழுக்கமில்லாமை. புண்ணியம் என்பது ஜீவகாருண்யம் ஒன்றே. பாவம் என்பது ஜீவகாருண்ய ஒழுக்க மில்லாமை ஒன்றே. ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் வரும் விளக்கமே கடவுள் விளக்கம். ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் வரும் இன்பமே கடவுள் இன்பம். நரகவேதனை சனனவேதனை

மரணவேதனை என்கின்ற மூன்று வேதனைகளுங்கூடி முடிந்த வேதனையே பசிவேதனை. மோட்ச இன்பமே ஆகாரத்தினாலுண்டாகும் திருப்தி இன்பம்.

ஜீவகாருண்ய மென்கின்ற மோட்ச வீட்டுத் திறவுகோலைக் காலமுள்ள போதே சம்பாதித்துக் கொண்ட சமுசாரிகள் சரியை கிரியை யோகம் ஞானம் என்கின்ற சாதன சகாயங்களை வேண்டாமல் எக்காலத்தும் அடையாத இன்ப வீட்டை அடைந்து அவ்வீட்டுக் கதவைத்திறந்து கொண்டு உள்ளே புகுந்து நித்திய முத்தர்களாய் வாழ்வார்கள்.

புண்ணியபூமிகளை வலஞ்செய்தல், புண்ணியதீர்த்தங்களிலாடல், புண்ணிய தலங்களில் வசித்தல், புண்ணியமூர்த்திகளைத் தரிசித்தல், தோத்திரஞ்செய்தல், ஜெபஞ்செய்தல், விரதஞ்செய்தல், யாகஞ்செய்தல், பூசைசெய்தல், முதலிய சரியை கிரியைகளைச் செய்கின்ற விரதிகளும் பக்தர்களும் இருடிகளும், உணவைநீக்கி உறக்கத்தை விட்டு விஷயச்சார்புகளைத் துறந்து இந்திரியங்களை அடக்கி மனோலயஞ்செய்து யோகத்திலிருக்கின்ற யோகிகளும், அளவிறந்த சித்தியின்பங்களைப் பெற்ற சித்தர்களும், நித்தியாநித்தியங்களை அறிந்து எல்லாப் பற்றுகளையும் துறந்து பிரமானுபவத்தைப் பெற்ற ஞானிகளும், சீவகாருண்யம் என்ற திறவுகோலைச் சம்பாதித்துக் கொள்ளாதவர்களானால் மோட்சமென்கிற மேல்வீட்டுக்கு முன்னும் பின்னுமாக எறிச்சமீபத்திற் காத்திருந்து மீளவும் அத்திறவுகோலைச் சம்பாதிக்கத் திரும்புவார்களல்லது கதவைத்திறந்து உள்ளே புகுந்து இன்பத்தை அடைந்து வாழமாட்டார்கள்.

ஜீவகாருண்ய ஒழுக்கமில்லாமல் ஞானம், யோகம், தவம், விரதம், ஜெபம், தியானம் முதலியவைகளைச் செய்கின்றவர்கள் கடவுளருளுக்குச் சிறிதும் பாத்திரமாகார்கள். ஜீவகாருண்யமில்லாது செய்யப்படுகிற செய்கைகளெல்லாம் பிரயோஜனமில்லாத மாயாஜாலச் செய்கைகளே.

பசித்தவர்களுக்குப் பசியை நீக்குகின்ற வியத்தில்; புருஷனைப் பெண்சாதி தடுத்தாலும், பெண்சாதியைப் புருஷன் தடுத்தாலும், பிள்ளைகளைத் தந்தை தடுத்தாலும், தந்தையைப் பிள்ளைகள் தடுத்தாலும், சீஷரை ஆசாரியர் தடுத்தாலும், அடியாரை ஆண்டவன் தடுத்தாலும், குடிகளை அரசன் தடுத்தாலும்,

அந்தத் தடைகளால் சிறிதுந் தடைபடாமல் அவரவர் செய்த நன்மை தீமைகள் அவரவரைச் சேருமல்லது வேறிடத்திற்போகா வென்பதை உண்மையாக நம்பி ஜீவகாருண்ய ஒழுக்கத்தை நடத்த வேண்டும்.

இவையெல்லாம் வள்ளலார் ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற நூலிற் கூறுவது சைவத்தில் ஜீவகாருண்யம் உண்டு எனினும் இவ்வளவு வற்புறுத்திக் கூறப்பெறவில்லை. முதன்மையாகக் கூறப்பெறவில்லை.

சைவத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் சாதனம். இவற்றுள் ஜீவகாருண்யமும் அடங்கும். சமரச சுத்த சன்மார்க் கத்தில் ஜீவகாருண்யம் முதற் சாதனம், முதன்மையான சாதனம் முடிவான சாதனம். ஜீவகாருண்யம் தனிச்சிறப்பாக ஏத்தி எடுத்துச் சொல்லப்பெறுகிறது.

ஞானத்தின் திருவுரு என்று ஞானசம்பந்தரைச் சொல்லுவது போன்று, ஜீவகாருண்யத்தின் திருவுரு என்று வள்ளலாரைச் சொல்ல வேண்டும்.

## சன்மார்க்கத்தில் காணப்பெறும் சைவசித்தாந்தச் செம்பொருள்கள்

முப்பொருள் (பதி, பசு, பாசம்) – மும்மலம் (ஆணவம், கன்மம், மாயை) – மூவகை உயிர்வர்க்கம் (சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர்) – ஆறந்தம் (கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம் போதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம்) – சரியை, கிரியை, யோகம், ஞானம் – தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம். – திருநீறு – பஞ்சாக்கரம் – எட்டும் இரண்டும் – ஓங்காரம் – ஒரு மொழி – சகலம், கேவலம், சுத்தம் – இரவு பகல் அற்ற இடம். – சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். – தத்பதம், தொம்பதம், அசிபதம் – தத்துவமசி வாக்கியம். – நயன, பரிச வாசக, அத்தமத்தகசை யோக, திருவடி தீட்சைகள், – அடிமுடி காட்டல், அடிமுடி சூட்டல் – சிலம்பொலிகேட்டல் – இருவினைஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம். – நவந்தருபேதம் – சத்து, சித்து, ஆனந்தம் – இவ்வளவும் சைவசித்தாந்தத்திற் காணப்பெறும் பொருள்கள். இவ்வாறே இன்னும் பல உள. விரிவஞ்சி இங்கே சுருங்கக் காட்டினோம். இவை அனைத்தும், இன்னும் இவை போன்ற. பற்பல பொருள்களும் வள்ளற்பெருமானால் திருஅருட்பாவிலும்,

உரைநடை அருளிச் செயல்களிலும், உபதேசங்களிலும் கூறப் பெறுகின்றன.

## சைவசித்தாந்தத்தில் காணப்பெறாது சமரசசுத்த சன்மார்க்கத்தில் வள்ளலாரால் குறிக்கப்பெறும். விளக்கப்பெறும் – பொருள்கள்.

கர்மசித்தி, யோகசித்தி, ஞானசித்தி – முத்தி, சித்தி – சுத்ததேகம், பிரணவதேகம், ஞானதேகம் – சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் – ஐந்தொழிலாற்றலைப் பெறுதல்– சமாதி வற்புறுத்தல் – அகஇனத்தார், புறஇனத்தார் – இவ்வாறே இன்னும் சிலவும் உள. விரிவஞ்சி சுருங்கக் காட்டினோம்.

## சைவசித்தாந்தம் பூர்வமும் சமரச சுத்த சன்மார்க்கம் உத்தரமும் ஆதல்.

சைவராகப் பிறந்த வள்ளலார், முற்பகுதியில் சைவராகத் திகழ்ந்த வள்ளலார், பின்னாளில் சமரச சுத்த சன்மார்க்கத்தை நிறுவுகிறார்.

சமயங்கள், தத்துவம் ஆசாரம் சடங்கு என மூன்று பகுதி களையுடையவை. தத்துவங்களே சமய உண்மைகள். அவற்றை அனுட்டிப்பதற்கு ஆசாரங்களும் சடங்குகளும் ஏற்படுத்தப் பெற்றன. காலஞ்செல்லச் செல்ல ஆசாரங்களும் சடங்குகளும் அதிகமாயின. தத்துவங்களை விட ஆசாரங்களுக்கு அதிக மதிப் பேற்பட்டது. ஆசாரங்களைவிடச் சடங்குகளுக்கு மதிப்பு அதிக மாயிற்று. தத்துவங்களை மக்கள் மறந்தனர், ஆசாரங்களையும் சடங்குகளையுமே பிடித்துக்கொண்டனர். சர்வம் சடங்கு மயம் என்றாயிற்று. பெருந்தெய்வ வழிபாடு வரவரக் குறைந்து சிறு தெய்வ வழிபாடு மிகுதியாயிற்று. உயிர்ப்பலி மிகுதியாயிற்று. ஆடம்பர வழிபாடுகள் மிகுந்தன. மனிதநேயமும் ஆன்மநேயமும் குறைந்தன, சரியை கிரியைகளுக்கு அளிக்கப்பெறும் மதிப்பு யோக ஞானங்களுக்கு இல்லை.

இந்நிலையில் வள்ளலார் சமயசீர்திருத்தம் செய்யவேண்டி யவரானார். சீர்திருத்தம் செய்யப்புகுந்தார். எதிர்ப்பு ஏற் பட்டது. பழைமையான ஒரு சமயத்தை அதே பெயரில் சீர்திருத்துவதை விட, அதை ஒட்டிப் புதிய ஒரு மார்க்கத்தைச் சற்றுப் புதிய பெயரில், பழைமையிலிருந்தும் அதிகமாறுபடாத பெயரில் நிறுவுவதே சிறந்ததென்று கண்டார். சைவத்தின்

சன்மார்க்கத்தைப் பூர்வமாகக் கொண்டு அதற்கு உத்தரமாகச் சமரச சுத்த சன்மார்க்கத்தை நிறுவினார்.

சைவத்திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங்களையும் ஏனைய சைவநூல்களையும், வள்ளலாரின் திருவருட்பாவையும் உரைநடை அருளிச்செயல்களையும் உபதேசங்களையும் முழுமையாக ஆய்வுக் கண்ணோட்டத்துடன் காண்பவர்க்கு, சைவசித்தாந்தமும் சமரச சுத்த சன்மார்க்கமும் பூர்வமும் உத்தரமுமாக விளங்குவது நன்கு தெரியும்.

சைவசித்தாந்தத்தில் விளக்கப்படாத பகுதிகளை விளக்க வந்தவர் வள்ளலார் என்னும் கருத்தை மறைமலையடிகளார் வலியுறுத்தி வந்தாரென்று சிவநெறிச்செல்வர் திரு ந. ரா. ஆடலரசு அவர்கள் கூறியிருப்பது முற்றிலும் உண்மை. (சித்தாந்தம் 1996 ஜூலை)

## சைவசித்தாந்த – சமரச சுத்த சன்மார்க்கப் பாலம்

சைவஉலகுக்கும் சமரசசுத்தசன்மார்க்க உலகுக்கும் இடையே ஒருவகை வெறுப்பு, எதிர்ப்பு, விரோத மனப்பான்மை திருவருட்பா வெளி வந்த உடனேயே உண்டாகிவிட்டது. அது இன்றளவும், எல்லா இடங்களிலும் இல்லாவிட்டாலும் சில பல இடங்களில் இருந்தே வருகிறது. இது இருசாராரும் நன்கறிந்ததே. இதை இனியும் மூடி மறைத்துப் பயனில்லை. இரு உலகங்களுக்குமிடையே உள்ள வேற்றுமையுணர்வைக் குறைத்து ஒற்றுமைப் பாலங் கட்டவேண்டியதே இன்றைய தேவை.

மறைமலையடிகள், திரு. வி. க., அழகரடிகள் ஆகியோர் சைவ – சன்மார்க்கப் பாலமாக விளங்கினர். வெள்ளை வாரணனாரும் இறுதி நாள்களில் திருவருட்பாச் சிந்தனை என்றொரு நூலை எழுதினார். இன்று டாக்[illegible] இரத்தினசபாபதி அவர்கள் சைவசன்மார்க்கப் பாலமாக விளங்குகிறார். அறிஞர் தோமொழியாரும் அப்படியே. இ[illegible] பட்டவர்களின் தொகை பெருகுவது நன்று.




வாழ்க! வாழ்க!

வள்ளலார் கழல் வாழ்த்தல் வாழ்வாவதே!

## ஊரன் அடிகள் - வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பெயர் | : | ஊரன் அடிகள் |
| முகவரி | : | தபால்பெட்டி எண் 2<br>வடலூர் 607 303, கடலூர் மாவட்டம். |
| தொலைபேசி | : | வடலூர் 607 303 (எஸ்.டி.டி. கோடு 04142) |
| பிறப்பு | : | 1933 |
| ஆய்வுப்பணிகள் | : | "சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம்" என்ற பெயரில் ஓர் ஆய்வு நிறுவனம் 1955-ல் நிறுவித் தமிழ், சைவம், சன்மார்க்கம், சமயங்களில் ஒப்பாய்வு முதலியவற்றில் ஆய்வு நாளிது வரை செய்து வருதல். |
| நூல்களில்சில | : | (1) வடலூர் வரலாறு<br>(2) இராமலிங்கரும் தமிழும்<br>(3) இராமலிங்க அடிகள் வரலாறு (தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்).<br>(4) வள்ளலார் மறைந்தது எப்படி (சாகாக்கலை ஆராய்ச்சி)<br>(5) வள்ளலார் கண்ட முருகன்<br>(6) திருவைந்தெழுத்தின் திறவு (பஞ்சாக்கர விளக்கம்)<br>(7) புரட்சித்துறவி வள்ளலார்<br>(8) சைவ ஆத்திசூடி<br>(9) சன்மார்க்க ஆத்திசூடி<br>(10) திருஅருட்பா (ஆறு திருமுறைகளும்) செம்பதிப்பு<br>(11) திருஅருட்பா (உரைநடைப் பகுதி) செம்பதிப்பு<br>(12) திருஅருட்பாத்திரட்டு |
| பல்கலைக்கழக அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் | : | (1) அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழ்த்துறை, திருவாசகச் சொற்பொழிவுகள் (1981)<br>(2) சென்னைப் பல்கலைக்கழகம் தத்துவத்துறை, சமய, சமுதாய ஒருமைப்பாடு குறித்த சிறப்புச் சொற்பொழிவு (1991) |

: (3) அழகப்பா பல்கலைக்கழகம்
தத்துவத்துறை
(1) தாயுமானவரும்
இராமகிருஷ்ணரும்
(2) தாயுமானவரும் அரவிந்தரும்
யோகத்திற்கு முக்கியத்துவமான
ஆய்வுச் சொற்பொழிவுகள்.
(1997)

கலந்துகொண்ட மாநாடுகள் : (1) இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு, சென்னை 1968 (பேராளர்)

(2) ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடு, மதுரை 1981 (பொது நிகழ்ச்சியில் சொற்பொழிவு).

(3) எட்டாம் உலகத் தமிழ் மாநாடு, தஞ்சாவூர் 1995 (பேராளர்)

சமய சம்பந்தமான மாநாடுகள் பல

யாத்திரை : இமயம்முதல் குமரிவரை பலமுறை

வெளிநாடுகள் சுற்றுப்பயணம் : (1) மலேசியா 1980, (2) சிங்கப்பூர் 1980 } மூன்று மாதம் 100 நிகழ்ச்சிகள்

(3) இலங்கை 1994 (15 நாள். இந்து சமயத்துறை அமைச்சர் அழைப்பின் பேரில்)

(4) தென்னாப்பிரிக்கா 1996

(5) மொரிஷியஸ் 1996

45 நாள் 45 நிகழ்ச்சிகள்

(6) பிரான்ஸ் (பாரிஸ்)

(7) பிரிட்டன் (லண்டன்)

(8) ஜெர்மனி

1997 மூன்று வாரங்கள்

தற்போது வகித்து வரும் பதவிகள் : (1) துணைத்தலைவர், தமிழகத்துறவியர் பேரவை.

(2) அறங்காவலர், வள்ளலார் தெய்வ நிலையம், வடலூர்.

சபாநாயகம் பிரிண்டர்ஸ், கீழவீதி, சிதம்பரம்.